உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருப்புலீச்சரம் ஸ்ரீ யௌவநேச நமகம்.

காரைக்குடி

ராம. சொ. சொக்கலிங்க செட்டியார் அவர்கள்

இயற்றியது



காரைக்குடி

மே. ப. பழனியப்ப செட்டியார் அவர்களால்

மன்னார்குடி

பாரதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

1921.

உ

காரைக்குடிச்
செந்தமிழ்க் கழகம்.

நூல். ௧

இந்து மதாபிமான சங்கம்,
காரைக்குடி.

# திருப்புலீச்சரம்

# ஸ்ரீ யௌவநேச நமகம்.



விலை: அணா ௪.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



# திருப்புலீச்சரம்
# ஸ்ரீ யௌவநேச நமகம்.



காரைக்குடி

ராம. சொ. சொக்கலிங்க செட்டியார்

அவர்கள்

இயற்றியது



காரைக்குடி

மே. ப. பழனியப்ப செட்டியார் அவர்களால்

மன்னார்குடி

பாரதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

1921.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முகவுரை



நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் முக்கிய நகரங்களுள் ஒன்றாகிய காரைக்குடியில், செந்தமிழ்க்கழகம் என்னும் பெயரிய சங்கமொன்று ஸ்தாபிக்கப்பெற்று நடையுறுகின்றது. தமிழ் மொழியினைப் பல்லாற்றாலும் வளர்க்க முன்வந்துள்ள இக்கழகம், இதுகாறும் வெளிவராத செந்தமிழ் நூல்களை அச்சிற்குக் கொண்டுவருவதோடு நாட்டின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாத பல சாஸ்திரங்களையும் தமிழ்ப்படுத்துவதைத் தனது முதற்கடமையாக மேற்கொண்டுள்ளது.

இக்கழகப் பிரசுரங்களுள் முதன்மையாக வந்த இந்நூல், இவ்வூர் நகரத்தார்களுளொருவரும் செந்தமிழ்ப்புலமை சான்றவரும் சிவபக்த சிகாமணியுமாகிய ஸ்ரீமான் ராம. சொ. சொக்கலிங்க செட்டியார் அவர்களால், எனது விருப்பத்திற்கிணங்க எங்கள் குடும்பத்திற்கு அபிமான க்ஷேத்திரமாகிய சிதம்பரம் திருப்புலீச்சரத்தில் திருக்கோயில்கொண்டமரும் ஸ்ரீ யௌவநேசர்மீது நமகமாக அன்பு பாராட்டி வரையப்பெற்ற அருமைவாய்ந்தது. ஸ்ரீ வியாக்கிரபாதரின் ஆன்மார்த்த பூஜாமூர்த்தியான ஸ்ரீ யௌவநேசர் திருநீலகண்ட நாயனாருக்கும் கணம்புல்ல நாயனாருக்கும் திருவருள் புரிந்த பெருமையை யன்னி யுன்னி யுவந்துளங் கனிந்த எங்கள் குடும்பத்திற் பெரியோர்கள் பக்திவலைப்

பட்டவராய் அம்மூர்த்தியின் றிருக்கோயிற் றிருப்பணியை மேற்கொண்டதுமன்றி அம்மூர்த்திக்கு நித்திய நைமித்திகங்கள் ஒரு சிறிதும் வழுவுதலன்றி நடைபெறுமாறு வேண்டிய ஏற்பாடுகளும் அமைத்தனர். இன்னோரன்ன சிறப்பு வாய்ந்த ஸ்ரீ யௌவநேசர்மீது நமகமியற்றி உபகரித்த ஸ்ரீமான் செட்டியார் அவர்களுக்கு எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகின்றேன்.

இச்செந்தமிழ்க் கழகம் மேன்மேலும் அபிவிருத்தியடைந்து தான் கொண்ட நற்றொழிலை இனிது நிறைவேற்றவும் நமது நாடெங்கும் தமிழ் மணங்கமழவும் தமிழபிமானிகளாகிய நகரத்தாரனைவரும் இதனை நன்குபாராட்டி இனிது வளர்த்தருள்வாராக. இன்னும் இத்தகைய நன்முயற்சியில் என்னை ஊக்கியருள எல்லாம் வல்ல யௌவநாதனை எப்பொழுதும் மனமொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

காரைக்குடி,
துன்மதி ஸு
ஆடி மீ ௫ உ

மே. நா. சித. நாகப்பசெட்டி
காரியதரிசி,
காரைக்குடிச் செந்தமிழ்க் கழகம்.

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௫ | ௨௫ | மகிழ்நிர் | மகிழ்நிற் |
| ,, | ௨௮ | சகமூ | சகமு |
| ௰ | ௫ | வஃதென | வஃதென் |
| ,, | ௰௭ | ரென்ன | ரென்ன் |
| ௰௫ | ௰௪ | தேசர் | தேசர்த் |
| ௨௬ | ௨௰ | கண்டா | கண்டர் |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருப்புலீச்சரம்

# ஸ்ரீ யௌவநேச நமகம்.

---

## காப்பு.

### விநாயகர் துதி

*கட்டளைக்கலித்துறை*

திருவுடை யந்தண ராநந்தக் கூத்தனைச் சேர்ந்தருச்சித்
தருளுறச் செய்புலி யான்மார்த்த நாயக னுப்பரவுந்
தெருள்விடை யான்யௌவ நேச நமகந் திருவடிக்கண்
மருவுநற் பேறு தருந்தில்லைக் கற்பக மாதங்கமே. க

### வியாக்கிரபாதர் துதி

*அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.*

சீரார் புலிக்கான் முனிவரநீ
சிவா அர்ச் சனைக்கா மலர்கொய்யு
நாரார் திருத்தொண் டரிதுணர்த்தி
நம்ப னருள்பெற் றின்புறுதி
தாரா ரிதழி முடியவனைத்
தமியேன் றுதித்தின் புறற்குரிய
வாரா நிறைபே ரன்பறிவோர்ப்
பருளா யதுநின் னியல்பாமே. உ

### பதஞ்சலியார் துதி

அரிய குருசொற் படிகயிலை
யணிநோற் றயனு யரன்மறுத்து
முரிய நிலைநின் றருளினிற்பூ
வுலகிற் றிகழ்மன் றணைந்துபுலிச்

சரணர் சார்பிற் புலீச்சரமுந்
தாழ்ந்தங் கமர்ந்தா நந்தநடந்
தரிசித் தெமக்குங் காட்டுபதஞ்
சலியார் சரணந் தலைக்கொள்வாம். ௩

திருநீலகண்ட நாயனார் துதி

நீல கண்டத் துறுமன்பே
நிலவு முருவா யுலகுய்ய
நீல கண்ட வபிதான
நிகழப் போந்தன் பெனுமுதுமை
நீல கண்டன் றருமிளமை
நிலைமை யென்று நிகழ்மணியே
நீல கண்ட னடிக்கன்பே
நீச னேற்கிங் கருளுதியோ. ௪

கணம்புல்ல நாயனர் துதி

விளக்கன் புடனிட் டார்பேறு
மெய்ம்மை ஞான மெனும்வாய்மை
விளக்கிக் கணம்புல் லளவெனினும்
மிகுபே ரன்பி னொளிபெருக
விளக்கிட் டருள்சார் புலீச்சரத்தெம்
விமலற் றுதித்துய்ந் திடவுளத்தை
விளக்கி யருளாய் கணம்புல்ல
விசிட்ட நாம மிளிர்மணியே. ௫

திருத்தொண்டர் துதி

சரியை யாதி நிக்கைமுறை
தந்தா சிரிக்கு மாசிரியப்
பெரிய ராவுங் குருருப்பப்
பிறங்க நேர்கண் டுலகனைத்துஞ்
சரியை யாதி சைவநெறி
சார்ந்துய்ந் திடப்பூ மியில்வந்த
பெரியர் தொண்டத் தொகையடியார்
பிரச மலர்மென் கழல்பணிவாம் ௬

## நூல்.

திருப்பு லீச சிவைநேச
திவ்ய தேச சிதாகாச
பருப்ப தேச பவநாச
பாச மோச பரகேச
கருப்பு கார்சொல் சிற்சபேச
கருப வாச காமேதசத்
தருப்பு ஞான கோசகயி
லாச யௌவ நேசநம. ௧

புலிக்கான் முனிவ னன்மார்த்த
பூசா மூர்த்தி யாயமர்ந்த
நிலைக்காங் கவற்கே யருளுதலா
நிகில சிவ ருந்தொழுதுய்
தலைக்காண் பரார்த்த லிங்கமுமாய்ச்
சார்பே கருணைக் கிலைபெனச்சார்
மலைக்கார் முகநின் னடிக்கன்பே
வழங்கா யௌவ நேசநம. ௨

புண்ட ரீக மாவடிவன்
புண்ட ரீக மாவடியாக்
கொண்டு மலர்கொய் தன்பொன்றே
குறித்த முனிசெய் பூசனைநேர்
கண்டு மகிழ்நிர் கன்பின்றிக்
கடையேன் புரிபூ சனையென்னுந்
துண்ட மதியோ டகியேற்ற
சூட யௌவ நேசநம. ௩

தந்தை மத்தி யந்தினரிச்
சகமுய்ந் திடச்செய் தவப்பயனாய்
வந்த பொழுதே மறைமுதலால்
வழங்க வுணர்ந்து தவமுணர்ந்தென்

றிந்த மொழிசை சவத்தியம்பி
யினிய வருண்மாண் புணர்த்துமழ
மைந்த முனிக்கா ரருள்வழங்கும்
வரத யௌவ நேசநம. ௪

வேத முணர்த்திச் சிவாகமமும்
விமல தீக்கை புரிந்தளித்த
தாதை யினிவேண் டுவதென்னெனத்
தகைசா றவங்கேட் டருச்சனையே
லாத லுணர்த்த வதுபுரிமே
லாய தலங்கேட் டடைந்தமழ
மாத வனுக்கா ரருள்புரிந்த
மணியே யௌவ நேசநம. ௫

சிவபூ சனையின் றருந்தவங்கள்
செயினுஞ் சுவர்க்கா திபபோக
மவையே யலது சிவகதியின்
றமல மோக்கம் பூசனையே
செவிசேர்த் தருண்மென் றுதைமொழி
சிரமேற் கொடுபோந் தருச்சனையிப்
புவிவாழ் வுறச்செய் புவிக்களித்த
புராண யௌவ நேசநம. ௬

அவனி முழுதுஞ் சிவசந்நிதி
யாக்காண் பகுசீ ரஃதன்மை
தவமில் குறையே யெனினுமுயிர்
சார்மெய்ம் முழுது நிறைந்துறினுங்
திவண்முக் கியநன் னிலையுளபோற்
சிவபி ராற்குண் டெனத்தாதை
நவிறல் வினைச்சார் புவிப்பாத
நாத யௌவ நேசநம. ௭

புவியி லேனை யெண்கண்டம்
போக மலதோ ரறமிலையா
னவிலும் பரத கண்டமதே
நலஞ்செய் துயும்பூ தலமென்று
புவனி யிற்போ யெனுஞ்சுருதி*
புகன்றுங் குறைந்த தந்தைமொழி
செவிகொண் டடைந்த முனிக்கருண்மா
தேவ யௌவ நேசநம. அ

ஞாலத் தலகில் சிவதலங்க
ணண் ணு மவற்று ணுல்வேத
மேலத் தகா வித்தையென
விசைக்குஞ் சுழுனைத் தலந்தில்லை
மூலக் கொழுந்தைப் பூசியென
முழுநீ றணிந்து விடுப்பவருஞ்
சீலத் தவமா முனிக்களித்த
தேவ யௌவ நேசநம. கூ

அரிய நெறிகள் கடந்தேகி
யருள்கூர் சிவகங் கையின்மூழ்கி
விரைமென் கமலத் தருச்சித்து
மேல்பால் வந்திங் கிதுவேநா
மருவற் கினிய தெனவமர்ந்தான்
மார்த்த மாநிற் றுபித்துப்
புரிபூ சனைசெய் புலிக்கருளும்
புனித யௌவ நேசநம. ம

வாவி மலர்ப்பூம் பொழிறூய்மை
வளஞ்சா விதுவே நாமென்று
மேவு மிடமென் றமர்முனிவன்
விடியி லளிசார்ந் துணுமூன்மல

* திருவாசகம்.

ராவ தெரியா தருவமுக்கு
மண்ணால் புலிக்கால் காங்கணனி
தாவென் றவைவேண் டன்பருளெந்
தாயே யௌவ நேசநம. ௰க

பெறுதற் கரிய மானிடமெய்
பெற்றுங் கரங்கால் விலங்குவடி
வுறுதற் கிறைஞ்சிப் பெற்றதுமெய்
யுமுவ லன்பா மொளியுருவங்
கறையற் றிலகப் பெற்றுளவக்
கவிஞ னன்றே மழமுனிவன்
நிறையற் பெளியேற் கருளாயோ
நிமல யௌவ நேசநம. ௰உ

இனிய பரார்த்த மான்மார்த்த
மின்றி யியற்ற லடாதென்னும்
புனித நூல்வா யுணர்த்துதற்கோ
புலிக்கான் முனிநிற் புலீச்சரத்துத்
தனது பூசை புரிஇமூலத்
தான சுயம்பு பூசனையுந்
தினமு நியமத் தாற்றினர்மா
தேவே யௌவ நேசநம. ௰௩

புலிக்கால் கரங்க ணயந்துபெறு
புதல்வற் பார்த்து மகிழ்காதை
குலக்கோர் மைந்த மனைய நீ
கோடி யென்வோர்த் துடன்வசிட்டர்
நலத்தார் பின்னி மணம்புணர்ப்ப
நண்ணி வாழ்புண் டரிகபத
வலந்தா பதற்கா ரருள்புரிந்த
வள்ளால் யௌவ நேசநம. ௰௪

ஏனை மூவர்க் காதரவா
யின்றி யமையா மனையறத்தின்
மான வாழ்நா ளுபமனிய
மைந்தன் வசிட்டர் மனைப்பருகு
மான பால்வேட் டழவினியஃ
தருந்தா தருளுண் டுய்கெனநின்
பானன் றுய்த்த புலிக்கருளும்
பரம யௌவ நேசநம. ௰௫

அன்னை முலைப்பா லினியருந்தா
தருட்பாற் கடன்மன் றகஞ்செலுப
மன்னி யனுக்குத் தந்தைமகிழ்
வானூட் டதுவே வான்றீக்கை
யென்ன மேற்கொண் டடிமுடிக்கொண்
டிறைஞ்சு கண்ண னிலைக்கிசையப்
பின்ன ரருளம் முனியைமகிழ்
பெரும யௌவ நேசநம. ௰௬

வசிட்டர் தேனுப் பான்மேல
வாவே தரலிற் பவக்கேதந்
நசைக்கொன் றருட்பா லுண்டுபவ
நலிபே ரின்பார் கெனத்திருமுன்
பசைக்கொண் டுய்த்த தாதையைப்போல்
பவர்சே யாகப் பணித்தியெனை
மிசைக்கும் * பிறப்பி னினிப்புகுத்தின்
விமல யௌவ நேசநம. ௰௭

கருமம் பிரம மெனுங்கரிசே
கடவு ளுமென் பவரலரிவ்
வருநோன் புறுவ ரெனத்திருத்தி
யவர்க்கு முனங்காட் டருணடனம்.

---

* மிசைத்தல் — உண்பித்தல்; அது ஈண்டு வினைப் போக மனுபவித்தல்.

விரவு முளங்கேதான் றனுமீண்டு
மிளிரத் தினங்கண் டெயவருண்மோ
வரனென் றவாவி யமர்புலிநா
யகனே யௌவ நேசநம. ௰அ

அத்தன் பொதுப்பேர் சிதம்பரமன்
றமலங் கமலஞ் சிவாலயமெய்
சத்தும் பரம்பொன் மயகோசஞ்
சத்தி சபையற் புதமகத்துச்
சுத்தம் பிரம முத்திகுகை
சுழுனே ஞான சுகந்தனிமுன்
முத்தி யருள்பேர் வழுத்துபுலி
முதல்வ யௌவ நேசநம. ௰கூ

அருமா மறைமன் றுதிபவா
யலகி ஞம மெடுத்தோதும்
பெருமான் பதனு லித்தலத்தெம்
பெருமா னடங்காண் பதுதிண்ண
மொருவா நின்று முனங்கண்டா
ருறுவ ரெனவோர்ந் துளந்துணிந்தங்
குருகா நிற்கும் புலியுளத்தி
னொருவா யௌவ நேசநம. உ௰

அருளே துணையாப் பிலநின்று
மரவோர் வரவோர்ந் தன்புமிகூஉப்
பெருமா னடங்கண் டாங்கின்பப்
பெருவா ரிதிதோய்ந் தவ்வரவைத்
தருமூ லட்டா னத்துடனிற்
சார்ந்து திருமுன் பணிவித்தாங்
கொருவா தமரும் புலிப்பாத
ருளத்தா யௌவ நேசநம உக

தாரு வனத்து முனிவர்விடச்
சாரு வனததுப் புலிபாம்பைத்
தேரு மனத்தி னுடையணியாத்
திகழக் கொண்டாய் பார்வையினன்
பாரு மனத்துப் புலிபாம்ப
ரடுத்தூன் னடிமை யாயென்றுஞ்
சாரு கெனக்காட் டௌவுகொலெந்
தாயே யௌவ நேசநம. உஉ

புலிய ரொருவர் முன்னையர்மேற்
புதிய பாம்பர் புகுந்தனரென்
றலகில் விலங்கா திகளிகலற்
றன்பார் தில்லைப் புலீச்சரவண்
டலனிற் சார்த்தச் சார்ந்தபதஞ்
சலியார் பலகா லிறைஞ்சவருள்
குலவு யௌவ நேசைமகிழ்
கொழுந யௌவ நேசநம. உங

அன்பா லுனவண் பதஞ்சலியா
ரடுத்தாங் கிறைஞ்சு பதஞ்சலியா
ரின்பார் தரவின் னருள்புரிசி
ரெவ்வ நாம்பி காநாத
தன்பால் வரினு மரவுனது
தக்க பணியென் றுடன்சார்த்தி
நன்பார் தரச்செய் புலிப்பாத
நாத யௌவ நேசநம. உச

ஈச னுன்னை பதஞ்சலிவந்
தியம்பி யாங்கந் நடங்காணு
மாசை பெருகக் கணமுழி
யாகக் கழித்தாங் கமர்ந்தாவோ

டோசை பெருக வாழ்புலிக்கா
ஞறுவர் பாசத் துறுவஃதென
பாச நேசர்க் கொழித்தருளும்
பரம யௌவ நேசநம. உரு

உறங்கு கின்ருன் புலியனென
வுரைத்த கிராத லாகவச்சொல்
சிறந்த பொருட்டென் றதிவிரைசெல்
சிங்க னிறைஞ்சி நின்றிடநேர்
திறந்து விழிகள் வந்தனையோ
சிங்க வரும வென்றருள்செய்ந்
நிறைந்த புலிக்கான் முனிநாத
நிமல யௌவ நேசநம. உசு

சுவரா சாங்கம் வேண்டாது
சுத்தாத் துவிதா னந்தநயச்
சிவரா சாங்கம் வாய்ப்புறநேர்
சேர்ந்த சிங்க வருமரென்ன
பவரா சாங்க கற்றிநடம்
பரவப் புரிது மெனத்துணிந்த
தவரா சாங்கத்தனிப் புலிக்கோர்
தலைவ யௌவ நேசநம. உஎ

ஆசை யுளதே லுடற்குற்ற
மகலுந் திறஞ்செய் தவநிபனுய்த்
தேச மிறைஞ்ச வாழுமது
திரண மெனநீத் தெமக்கருளு
மீச னெனவந் தடிமுடிக்கொண்
டிறைஞ்சு கவுடே சனையுகந்த
மாசில் புலிமா முனிபோற்றும்
வள்ளால் யௌவ நேசநம. உஅ

இவணீ ரிற்றி யென்றுடசத்
திருத்திப் போந்து பதஞ்சலிமா
தவர்பாற் சிங்க வருமனிலை
சாற்றிப் பரிந்திங் கிவன்மன்றிற்
றிவள்வான் பணிக்கா மிறைவனரு
டோர்து மெனமன் றுறுகாலத்
தவரோ டேகும் புலிதினம்போற்
றமல யௌவ நேசநம. ௨௧

அமல மன்றிற் பதஞ்சலியோ
டடுத்தாங் கண்ணல் கவுடேச
குமர னணைந்தா னவனுடற்சார்
குற்றங் கடிந்தன் னடக்கோலம்
விமல வருளி யடிமைகொள
வேண்டு மெனவின் ணப்பநவின்
முமல மகற்று புலிக்கினிய
முதலே யௌவ நேசநம. ௩௰

சிங்க வருமன் றனைநீவிர்
திகழ்பொற் கமல வாவிசிவ
கங்கை படிவித் தெங்கூத்துக்
காண்பான் முன்கொண் டுறுதிரென
வங்க ணிறைவ னருளிப்பா
டாக வளவி லகமகிழ்ச்சி
யொங்கு மரவு புலிபோற்று
மொருவ யௌவ நேசநம. ௩௧

அங்க ணருளிப் பாடியரோ
டகன்று சிங்க வன்மவனைக்
கெங்கள் பெருமா னடங்காட்டற்
கிசைந்தான் வருகென் றிசைத்தணைய

மங்க லஞ்செய் பகையப்போன்
வாவி படிகென் றேவியவுத்
துங்க வரவு புலிபணியுந்
தூய யௌவ நேசநம. ௩௨

முனிவர் வாய்மை வாய்மையென
மூழ்கி யெழுவேந் திரணியமா
யினிய மேனி யொளிதிகழ்வுற்
றெழக்கண் டெவரு மதிசயித்தங்
கனைய நிபத்தா லிரணியவன்
மாவென் றழைப்ப வன்புவகை
நனிமிக் குளங்கொள் புலிப்பாதர்
நாத யௌவ நேசநம. ௩௩

ஆரிய சிவகங் கையின்மூழ்கி
யருக்க னொளியுஞ் சமழ்ப்பவெழும்
பெரிய விரணி யப்பெயரோன்
பெருமா னடங்காண் புறற்கிதுவே
யுரிய விதியென் றைந்தெழுத்து
மோது சிவதீக் கையினைமுறை
புரியும் புலிக்கான் முனிநாத
புனித யௌவ நேசநம. ௩௪

தீக்கை புரிந்தாங் கிரணியனைச்
செய்ய திருச்சிற் றம்பலமுன்
னுக்கி யமல னடம்புரிய
வவன்கண் டளவாப் பேரன்பு
தேக்கி வாய்ப்போந் தெனத்துதித்துத்
திருமு னிற்ப வுடனின்று
காக்கும் புலிக்கான் முனிதொழுமுக்
கண்ண யௌவ நேசநம. ௩௫

இறைவ னிரணி யனைநோக்கி
யெம்பா லன்பா துதியுவந்தோ
முறுவ ரிருவர்க் குரியதிரு
வுடையந் தணர்க்கு நமக்குவகை
நிறைதொண் டாற்றி வாழ்கெனவந்
நிமலற் போற்றவ் வரசையழைஇ
முறையி னேகு புலிககினிய
முதல்வ யௌவ நேசநம. ௩௬

அரிது புறஞ்செ லிரணியனை
யழைத்துக் கொடுபோ யருண்மூலத்
துரிய முதலை யிறைஞ்சிமலர்
தூவிப் பரவப் புரிந்துபுலீச்
சுரர்முன் பணிவித் தநந்தேசர்
தொழுவித் துடனுய்த் தம்முடச
மருவி மகவிற் பேணுபுலி
வரத யௌவ நேசநம. ௩௭

மனையை நோக்கி யுபமனிய
மகற்குப் பின்னி பெறுதுபெறு
தனைய னிவன்கைக் கோடியெனத்
தாய்தாண் மலர்வீழ்ந் திறைஞ்சிரணி
யனையவ் வனைமே லெடுத்துமகிழ்ந்
தமல னருள்சேய் மணியெனக்கொண்
டினிது களிப்ப வளித்தபுலி
யீச யௌவ நேசநம. ௩௮

அரசை யுவந்தாங் கருகிருத்தி
யரனெங் கணுமார்ந் திருக்கினுநேர்
தெரிய வரிதால் வீடரிதாஞ்
சீவர்க் கெனப்பல மூலமமைத்துச்

சுரபி முலைப்பா லெனவிளங்கத்
தோன்றி யருளு மெனும்வாய்மை
யுரைசெய் புலிக்கான் முனிபோற்று
மொருவ யௌவ நேசநம. ௩௯

அறுபத் தெட்டோ டாறுமுன்
றலகி றலங்க டமின்முறையே
யிறைமிக் கிலங்கு தலங்களுள
வீற்றின் மொழிமுத் தலஞான
நெறிமுற் பெறுரும் வீடெளிதி
னிமலன் சருவ மானியமாப்
பெறவைத் தனவென் றருள்செய்புலிப்
பிரிய யௌவ நேசநம. ௪௰

அன்ன தலமா ரூர்காசி
யருண்மன் றவற்றிற் பிறப்பிறப்பாற்
றன்னை நோக்க லான்வீடு
தருமுன் னிரண்டிற் சார்ந்திலநா
மன்னு தில்லை ஞானதல
மலநீத் தொருவீ டெளிதருளு
மென்ன வரசுக் குரைத்தபுலி
யீச யௌவ நேசநம. ௪௧

புவன மெவைக்கும் பெரும்பற்றைப்
புரியும் புலியூர்ப் பொன்மன்ற
மிவர்சச் சிதாஅ நந்தமய
மிதனி லிறைவந் தியனடங்கண்
டெவணை திளைத்தோ முறுவர்பல
ருற்றூர் நீயும் பெற்றுமீண்
டவல மறவென் றருள்புலிக்கோ
ராசே யௌவ நேசநம. ௪௨

தென்ன* ரொளிமன் றகன்றுகதி
தேடிப் புகிற்கா சியினுமிலை .
யன்னர்* மணிமன் றுறின்மன்ற
வருளுந் †கோதோ கனமுனையம்
புன்னி விழுதல் கண்ணிமைத்த
லுறுபோ ‡தெனுநேர் கண்டவர்க்கும்
பொன்மன் றருளு முத்தியெனும்
புலிசேர் யௌவ நேசநம. ௪௩

மன்றி னடநேர் காண்பெரியர்
வயங்கு பரிபூ ரணஞானத்
தொன்றி யிரண்டற் றமர்கலவி
யுறுவர் கருத்தின மையினைந்தொழிற்
கென்று நிபரா கார்நிருத்த
வின்ப ரவர்வா ழிடம்பொதுவா
நன்று வேந்தோர் கெனும்புலிக்கோர்
நாத யௌவ நேசநம. ௪௪

சூதன் வியாதன் முதற்பலருந்
தொழுதுய்ந் தனர்வேண் டுபுலியின்
பாதம் பெற்றே முபமனியன்
பால்வேட் டருட்பாற் கடலுண்டான்
மாத வன்பொன் முடியிலடி
வைத்தாங் கிலிங்கம் வழங்கினனிப்
போது **போது மெனும்புலிசேர்
புனித யௌவ நேசநம. ௪௫

---

* தென்னர் — தென்றேசத்தார் * அன்னர் — அவ்வடதேசத்தார் † கோதோகனம் — பசுவிற்பால் கறத்தால் ‡ எனும் — இடைக்குறை ** போதும் — வருவன்.

அனந்த னருளாற் பதஞ்சலியா
யணைந்திங் கெம்மோ டுறவமலன்
முனந்தன் னடமன் றுறவிளக்கி
முதமிக் களித்தான் சாமகர்கோ
னெனுஞ்சை மினிபோந் தின்பநட
மிறைஞ்சி வேத பாததவ
னனைந்து துதித்தா னெனும்புலிசேர்
நாத யௌவ நேசநம. ௪௬

பசையொன் றிலன்றூற் கடனென்றோர்
பாவி தீர்த்தோற் சவமிறைகொண்
டிசைவா ரிதியி னம்பிகவிழ்ந்
திடவீழ்ந் துடன்வீழ்ந் திறந்தவரோ
டசைவில் வீடுற்றன னெனிலிவ்
வணிமன் றமல னருளெவரே
நசையுற் றுரைப்பா ரெனும்புலிக்கோர்
நாத யௌவ நேசநம. ௪௭

உலகி லெனைய தீர்த்தமய
லும்ப ரனைய வொளிர்தில்லைச்
சுலவு பிறநீர் மாலயன்முற்
சுரர்போல் வனவன் சிவகங்கை
யிலகு சிவனு முனக்குடனே
யிரித்தோள் ளொளிதந் ததுமோர்தி
குலமன் னவவென் புலிக்கருளெண்
குணத்த யௌவ நேசநம. ௪௮

கங்கை யமுனை வாணிமுதற்
கவினீர்க் குலமெ லாம்வணங்குத்
துங்க சிவகங் கையையிஃதோர்
தோய மெனவுன் னேலமல

னங்க ணாருளே யாமிதிலா
ரைய மிலேசத் தியமென்று
செங்கை யெடுத்தோ தும்புலிசேர்
தேவ யௌவ நேசநம. ௫௯

தூய நடனத் திருமேனித்
தோற்றப் பொலிவு நங்கருத்தின்
மேய வாநந் தமுமத்து
விதமா விளக்கி யகம்புறமின்
றூய வருளு நமக்களித்த
வருமை யார்பெற் றுரென்று
வாய்மை தெளித்த புலிக்கருளும்
வள்ளால் யௌவ நேசநம. ௬௰

மேலுந் தில்லை மான்மியஞ்சொல்
விமல சூரவற் பணிஇவிழிநீர்
காலும் படிநின் றன்புருவாய்க்
கனிதண் புனித னிரணியப்பேர்ச்
சீலன் றினமுஞ் சிவகங்கா
தீர்த்தம் படிந்து சிவநியமப்
பாலின் புறச்செய் திறைஞ்சவருள்
பரம யௌவ நேசநம. ௬௧

சென்னி மனங்கண் சூரவனடி
திகழ வைத்தோர் பொருளாக்கொண்
டென்னை விளக்கிற் றுன்கருணை
யென்று நிழல்போ லுடன்சார்ந்து
பன்னு மநந்தற் பணிந்துதினம்
பணிக ளவர்க்காற் றுபுவாழு
மன்ன னிரணி யனுக்கருளும்
வள்ளால் யௌவ நேசநம. ௬௨

கவுட மனுவாந் தந்தையுயிர்
கழிந்த பின்சொற் படிவசிட்ட
னிவனைய் துவதோர் புலிசொலச்சென்
றிறைஞ்சி யாசி யின்மையுணர்ந்
தவனைந் தையின்மேருள் வாழிகொலென்
றூர்வம் விளக்கி நிலங்கிழிப்போர்ந்
துவகை தளர்மன் னவன்பணிகொ
ளொருவ யௌவ நேசநம. ௫௩

மன்னன் மைந்த னிரணியனு
வகையின் றயர்த லோர்ந்துகளாத்
துன்னு நிழல்வா ழீசன்பாற்
றுயர்தீர்ந் திருக்கும் வசிட்டமுனி
முன்னர் வரச்சென் றரவினுடன்
முகமன் பெருகக் கலந்தமர்ந்தாங்
கின்ன லறத்தேற் றுறுபுலிசே
ரெந்தா யௌவ நேசநம. ௫௪

மூவ ரவண்வீற் றிருந்தகன்பின்
முன்வந் திறைஞ்சு மிரணியனை
யாவென் னுரைத்து முடிந்ததிஃ
தயர்த லொழிக மைந்தநீ
சாவு பிறப்பு மாலயன்முற்
சகல வுயிர்க்கு முண்டெனத்தேற்
றேவில் புலிக்கான் முனிபோற்று
மொருவ யௌவ நேசநம. ௫௫

வாடை பொதுக்கு சருகுகளை
மறித்துப் பிரிக்குஞ் சூறையென
வூடு மனைமைந் தரையுறவை
யொருங்கு கூட்ட மெல்வினைபின்

னேடும் வகைவல் வினைபிரிக்கு
மொழிதி யருளி லாரினனர்
கூட லெனத்தேற் றெண்புலிசேர்
கோவே யௌவ நேசநம. ருசு

இருவீ ரருளா லிவன்பொனுரு
வெய்தி யுய்ந்தான் யாமுய்ந்தோ
மொருவா துலகுய்ந் தனசுரரு
முய்ந்தா ரெனில்யா ருரைப்பவர்நும்
பெருமாண் பெனுமா வசிட்டரையப்
பேணு சிவகங் கையிற்படிவித்
தருண்மா நடச்சி ருணர்த்துபுலிக்
கரசே யௌவ நேசநம. ருஎ

திருத்த னிருத்தங் கண்டிறைஞ்சித்
திருமூ லட்டா னம்போற்றி
யருத்தி யுறநிற் பணிவசிட்ட
ரருந்து விருந்து புரிந்தவர்பின்
விரித்த பணிபோற் றநந்தேசர்
விரைத்தாள் பரவி மேவுறவாங்
கிருத்தி யுடன்சார் புலிபோற்று
மீச யௌவ நேசநம. ருஅ

செய்வ நியதி வழிநாள்வை
திகவேந் தென்னும் வசிட்டருடன்
சைவ வேந்தும் பணிவேந்துந்
தகமுன் முடித்தாங் கொருங்குறக்கண்
டவ்வை திகசை வப்பெரிய
ரடிதாழ்ந் திறைஞ்சு மப்புலிவேந்
துய்வ தாமுசி ரிரணியன்போற்
றெருருவ யௌவ நேசநம. ருகூ

இறைஞ்சு மிரணி யன்னடிகே
                ளெந்தை மார்நீர் மைந்தனியான்
மறந்து மனூர்சார் கிலன்வீடு
                வாய்க்கப் பெறுவ னெனத்தாதை
சிறந்த மகற்கு முடிசூட்டித்
                திருந்த நடத்து கென்றிறந்த
திறந்தந் துறைத்த வசிட்டர்பணி
                தேவே யௌவ நேசநம. ௬௰

மனுசொற் படியிவ் விரணியப்பேர்
                மைந்தற் கொடுபோ தரவந்தோ
மெனவவ் வசிட்ட ரினிச்செயலென்
                னென்னுங் குறிப்போர் தரநோக்கிப்
பினரு மிறையின் மகற்குநீ
                பேசுன் கருத்துக் கிசைந்ததைநே
ரனக வேந்தென் றருள்புலிசே
                ரரசே யௌவ நேசநம. ௬௧

குரவ னுணை சென்னிமனங்
                கொண்டிவ் வரசோ சித்திகண்மேற்
சுரர்தம் வாழ்வு முதலனைத்துந்
                துச்ச மெனவே துணிந்தனனும்
பரவு திருத்தொண் டாற்றுபின்
                படர்வே பெருவாழ் வெனக்கொண்டே
னருள்க வெனுமவ் விரணியன்போற்
                றன்றால் யௌவ நேசநம. ௬௨

மைந்த கேண்மோ நின்கருத்து
                மாண்பிற் றதற்கே சார்பாக
வந்தண் கவுடஞ் சென்றுநின
                தாலை விளக்கி மோலியமைச்

சுந்து பொருளோ டாறைஞ்ஞூற்
றுறுவர் தமையு மழைத்துடனீ
வந்திங் கமர்க வெனும்புலிசார்
வரத யௌவ நேசநம. சுஙு

அடிக ளருளிற் றெதுவதுநோன்
பாக்கொண் டேனென் றாசுரைப்ப
நடன்மு னவன்போய் வரவேண்டு
நலம்விண் ணப்பித் தருள்கருணைத்
திடனல் குறப்பெற் றிரணியநீ
செல்க விரைந்து திரும்புகவென்
றுடனன் றுரைத்துய்த் தருள்புலிபோற்
றொருவ யௌவ நேசநம. சுச

குயிற்றும் வினையான் வினையாக்கிக்
கோட னெனுநூற் பொருண்மலநீத்
துயச்செ விரணி யனைக்கொடஃ
தூஞற்றி யுடன்பொற் பணிமன்றிற்
செயற்கு மேவிப் புரிவித்துத்
திகழ்ந்து புலிக்கான் முனியுளமாம்
வியற்பொற் றளிவீற் றிருந்தருளும்
விமல யௌவ நேசநம. சுரு

இதனை யிதனு லிவன்முடிக்கு
மென்றூய்ந் ததனை யவன்கண்விட
லதனை யுணர்த்தாங் கிரண்மயமன்
றரிய பெரிய பணிக்காற்றன்
முதனை விலன்பொற் பெரியவனே
முடிக்கு மென்றுங் குய்த்தபுலிப்
பதனை யுகந்து பணிகொண்ட
பரம யௌவ நேசநம. சுசு

மன்ற மிறைஞ்சி வசிட்டருடன்
வரவுந் தனைநீ றளிப்பநமஞ்
தொன்று முளமங் கிருத்துபுசென்
றுமுவை முனிவன் றனையாண்ட
நன்றி புகன்று வழிகழிய
நடந்து விரைந்து தண்கவுடஞ்
சென்ற விரணி யன்போற்று
செல்வ யௌவ நேசநம. கூஎ

நாடு களிப்ப நகர்களிப்ப
நம்பி தம்பி மார்களிப்பக்
கூடு சசிவர் களிப்பமணிக்
கோயில் பொலிய வீற்றிருந்து
நீடு பொருண்முற் பலவளனு
நிறைந்து நோக்கா தாசான்சொற்
பீடு நோக்கு கவுடேசப்
பிரிய யௌவ நேசநம. கூஅ

ஆடல் விளக்கு புலிமுனிபே
ரருளே நினைந்தோர் கணமுகத்தி
னீட லாவிங் கினித்தரியோ
நிறைமன் றடைதும் வரின்வருகென்
பீடு சசிவ ரோர்ந்திறைஞ்சிப்
பிரிவின் றுடன்சார் பெரும்பயணங்
கூட விரைசெ லரசுபணி
கோவே யௌவ நேசநம. கூக

அனுச ரமைச்சர் பொருட்குவையோ
டந்தர் வேதி யடுத்தவண்சார்
புனித மறையோர் தமையழைத்துப்
புலியூர் புகுந்தாங் கிறைஞ்சரக

தனைவாழ்த் துபுமூ வாயிரர்நேர்
சார்ந்து *பணிவேந் தூடனுவகை
நனிகூர் தருவண் புலிப்பாதர்
நாத யௌவ நேசநம. எய

கங்கை யமுனை யிடைவசித்த
கவின்மூ வாயி ரவர்தங்க
டங்க ளேரி னிழிதலும்புற்
சரண வயன்மேல் வேண்டினுநீ
யெங்க டமையிப் புலியூர்விட்
டேகப் பணியே லெனவேண்டுந்
துங்க மிகுவண் புலீச்சரத்தொண்
சுடரே யௌவ நேசநம. எக

எண்ணிக் காண்போ தொருவரிலா
தினைய வனையன் கவலொழிப்பா
னெண்ணி யிவரி னுமொருவே
மென்று நபவாக் கெழுமகிழ்ச்சி
நண்ணி மூவா யிரர்ப்பரவி
நமந்து நமக்கு மிறையருட்சீர்
நண்ணிற் றெனவன் புருகாசை
நயக்கும் யௌவ நேசநம. எஉ

வேத சார சிவாகமத்தின்
விதியோர் சிறிதும் வழுவாமற்
போது தோறுந் தனைப்பூசை
புரியன் பினரா தவினடன

* பாம்பு

நாத னிவரை யுகந்திவரி
ஞானு மொருவ னென்றுனென்
றேது வுணர்வோர் திறைஞ்சவரு
ளீச யௌவ நேசநம. எங

கூறு மூவா யிரர்சூழக்
குலவு மன்றின் குணதிசையிற்
றேறு மரசன் படைவீடு
செய்து பலஞ்சூழ் தரமுன்குடி
யேறி யுடன்கொற் றவன்குடியென்
றேது நாம மிலங்கவமர்ந்
தூறு மன்பாற் றினந்துதிப்ப
வுவக்கும் யௌவ நேசநம. எச

அனுசர் கவுட நாடாள்க
வன்ப நீயிந் நாடாள்கென்
றினிது புகன்று மணம்புரிவித்
தெழின்மன் றகத்தோர் மண்டபத்துக்
கனக மோலி முறைகவித்துக்
கவின்புற் கொடியுங் கைக்கொடுத்தவ்
வனக வரசுக் கருள்புலிபோற்
றமல யௌவ நேசநம. எரு

சைவ நெறியா றைஞ்னூற்றந்
தணர்வாழ் திருமா ளிகைநிரைகள்
செய்வ தெவ்வா றெனக்கூரவன்
றிருமுன் பணிந்து தெரிந்துபுரிந்
துய்வன் பொருள்க ணிறைத்தவராங்
குறுதா பனஞ்செய் தேவல்புரி
செவ்வி யரசன் றினம்பணிமா
தேவ யௌவ நேசநம. எசா

காலந் தொறுமச் சிவாகமநூல்
கழறு முறையே பூசனைசெய்
மேலந் தணர்மா ளிகைகடிரு
வீதி திகழ நாப்பணொளி
சாலம் பரமன் றருண்மூலட்
டானஞ் சுராருஞ் சமழ்ப்புறப்பல்
கோலம் பெருகப் புரியரசுட்
குலவு யௌவ நேசநம. எஎ

மணிமன் றுரிய சிவாகமநூல்
வகுத்த முறைபல் லங்கமெலா
மணிநின் றொளிரப் புரிஇத்தினமு
ஞண்டு வரைசெய் விழாப்பொலிவு
மெணிநன் றியற்றி நிபந்தங்க
ளென்றும் பெருக நிறைத்தனைய
பணியும் புரியுஞ் சோழேசன்
பரவு யௌவ நேசநம. எஅ

பரவா கமநூற் பூசனைபோர்
படித்தா லென்றும் பயின்றியற்றி
வருமா மகுடா கமமுறையின்
வரைசிற் சபாபூ சனைவிதியென்
றொருநூல் புரிந்து பதஞ்சலியா
ருதவ வஃதோர்க் துறுவர்மகிழ்
தரநேர் பணியு மரசிறைஞ்செசந்
தாயே யௌவ நேசநம. எகூ

தரக்கு முனிவர் திருவுடையந்
தணர்முன் றோரைப் பதஞ்சலியார்
தரக்கொள் பூசா விதிநூலைத் *
தந்தி மேலாய் வலமவரச்செய்

*இந்நூல் சிற்சபா பூஜாவிதானம் என்னும் பெயர்த்து. இதன் விவரத்தைக் கோயிற் புராணத்திற் காண்க.

தருட்சிற் சபையுய்த் தருச்சிப்ப
வனைய முறையா வையுநடத்தி
யருட்பெற் றுய்ந்த வரசுபணி
யரசே யெளவ நேசநம. அ௰

ஓடே யெனினும் பற்றறநீத்
துனைப்பற் றினர்கை யுறினதுபொன்
கோடா கோடி யெனுமதனுற்
கொள்ளக் கிடையா தென்றவர்தம்
பீடோர்த் திடவோ சிவவருக்கப்
பெரியர் குயவ ராய்த்தில்லை
மாடே வரச்செய் ததுதெரித்தாய்
வரத யெளவ நேசநம. அக

பொய்ம்மை நெறிமுற் ருெழித்தறமே
புரிவார் தூய மனையறத்தின்
வையம் போற்று மாண்புடையார்
வழுத்து சில முளரென்றுஞ்
சைவ நலமே பொருளாகச்
சாவா ரெனச்சேக் கிழார்பரவுந்
தெய்வ நீல கண்டாபணி
தேவே யெளவ நேசநம. அஉ

தீய நெறிசே ணிடையுமுருத்
திறலர் நீல கண்டத்தி
ணய பேரன் பொருபொழுது
மசைவி லாரென் பனவாதி
தூய மகிமை சேக்கிழார்
துலங்க விதந்து துதிக்குநல
மேய நீல கண்டரையாள்
விமல யெளவ நேசநம. அங

இன்பத் துறையி லெளியரா
யினரென் சேக்கி ழார்கருத்தவ்
வின்பத் துறைமுற் றொழித்துடன்*சா
ரியல்பு விளக்கு நயமலது
முன்பற் றுளதேன் மனையாணை
மொழிகேட் டனுநீங் காதுவர
வென்பொற் பிலக்கு நீலகண்ட
ரிறைஞ்சு யௌவ நேசநம. அச

அங்கோர் பரத்தை பாலணைந்தென்
றருளிற் றிருளிற் பெருமழையிற்
றங்கோ ரிடனுஞ் சார்ந்தணைந்த
தகைமை யலது சேணினுந்தீங்
கிங்கார் கிலரென் பஃதாதிக்
கிழுக்கா யிசைத்தன் றென்றறிஞர்
நன்கோர் நீல கண்டர்தொழு
நாத யௌவ நேசநம. அரு

ஓடு கொடுத்த திப்பவஞ்சத்
துறவு மனைமு னெவற்றையுமிவ்
வோடு போற்பற் றுதொழித்தாங்
குனையே பற்றி யுறல்விளக்கி
நாடு தீக்கை முறைகளிலோர்
சூலனே யெனவான் றேருரைசிர்
கூடு நீல கண்டர்பணி
கோவே யௌவ நேசநம. அசு

உடனு யிருந்துங் காமமனு
வுஞ்சா ராம னனைப்போலத்
திடனு யமர்ந்து மெய்யடியார்
சிவனே யெனு நூல் வாய்மைபுலப்

---

* உடன்—மனைவியாருடன்

படனேர் விளக்கி நின்னருளே
பற்று நீல கண்டர்முனம்
விடைமே லுறவுந் தின்பருளு
விமல யௌவ நேசநம. அஎ

அருள்வா ரிதிதோய்த் தெண்ணிரண்டாண்
டருண்மை வியுந்தந் தனையெனமுன்
மருவா வியிற்றோய்த் தெஞ்ஞான்று
மன்னு மிளமை வடிவளித்துத்
திருவார் நீல கண்டருக்குந்
தேவி யார்க்கு மின்பருளி
யொருவா துடன்பாங் குறக்கொண்ட
வொருவா யௌவ நேசநம. அஅ

வென்றைம் புலன்மிக் கிரெனநீ
விடைமேற் போந்து விளம்பியமைத்
தென்றும் பிரியா விளமைபெறீஇ
யிருத்திர் நம்பா லெனமனையோ
டன்றங் கருளப் பெறினவர்பா
லணுவும் பழுதொன் றுறுமோமு
னென்றும் பரும்போற் றருட்குயவ
ரிறைவ யௌவ நேசநம. அகூ

செய்ய விளக்க மிருள்சிதைத்துத்
திகழ்த்தல் கண்கூ டென்றிருமுன்
றுய்ய தீப மணுதியிரு
டொலைத்துன் சொருபம் விளக்குணர்வுற்
றுய்ய வருள லறிகுறியென்
றோர்ந்து கணம்புல் லடிகளா
னெய்யி னியற்று பணியுவக்கு
நிமல யௌவ நேசநம. கூ0

செல்வம் பெருகுந் திருத்தொண்டு
செய்வார்க் கெனலாற் றிருவிளக்குச்
செல்வம் பெருக நின்றிருமுன்
றிகழ்த்து கணம்புல் லருக்களித்தச்
செல்வங் குறையி னுந்திறம்பார்
செயும்ப் பணியென் றோர்த்திடவே
செல்வங் குறையப் புரீஇப்பினருள்
செல்வ யௌவ நேசநம கக

அறம்பற் பலசெய் நமக்குமிடி
யலக்க ணாமென் றுணராமற்
றிறம்பு மவரோர்ந் துயக்கணம்புல்
செடிசேர் சிகைத்தீ பத்தினையே
சிறந்த நெய்த்தீ பத்தினுமேற்
றிருந்து பணியாக் கொண்டடனே
விறந்த கணம்புல் லருக்களித்த
விமல யௌவ நேசநம. கஉ

அரனு லயத்தின் மயிர்கோத
லதுவும் பழுதென் றறிந்துமதை
யெரிமே வுறச்செய் கணம்புல்லர்க்
கின்ப மளித்தா யிதனலைத்
தெருள்யோ கத்தி னுச்சியின்மேற்
றிகழ்பே ரொளியே யெனக்கண்டாய்
பரனீ யெனமெ யுணர்பெரியர்
பரவு யௌவ நேசநம. கங

புலிபாம் புவமன் னியன்வசிட்டன்
பொற்பே ராசு சைமினிமுற்
பலமா தவர்வா னவரெனையோர்
பரவி நினதாள் பற்பலசீர்

நலமே வினரோர் நலனுமிலா
நாயேற் கருளி னின்புகழித்
தலமே லெவர்க்கும் புலனுமெந்
தாயே யௌவ நேசநம. ௩௪

ஆவி யடைவி னுயக்குருவிந்
காதி களும்வைத் தனையருளே
தேவி யெனநின் றினிதுய்ப்பச்
செய்தி யிவற்று முய்வில்பெரும்
பாவி பிறந்தை பலகோடி
படருற் றுலேதல் பாற்றியரு
ளோவி லனந்த சத்திமா
ஞெருநீ யௌவ நேசநம. ௩௫

தனிபே ரருளே யுடையவனீ
நாயேன் பிறந்து பிறந்தென்று
மினையா நிற்றற் கிரங்கிலையென்
றிடவு முளமஞ் சுவபிறவித்
துனிநீ பறியாய் பிறப்பிலியேற்
சுருதி சருவஞ் ஞதையுனக்கே
யினிதோ திடுந்தண் புலீச்சரம்வா
ழெந்தா யௌவ நேசநம. ௩௬

வாராய் சிறுவ வருந்தற்க
மற்றுன் கரும வலிபெரிதா
நேராய் வினைபக் குவமாகி
நேரிற் பவநீத் துய்வையெனி
லோரா வினையேற் கேதுசெய
லுடையாய் குறைவி லாற்றலைநீ
தாரா யருளே வினைதபுத்தெந்
தாயே யௌவ நேசநம. ௩௭

பவங்க டொறுஞ்செய் தீவினையாற்
படருற் றலைதி படிமுறையே
தவஞ்செய் துணர்வுற் றுய்வதலாற்
சடிதி யருளிற் றவறிஃதோர்
நவஞ்செய் விதிகொ லென்றயிர்த்து
நவில்வ ரெனினீ சுதந்திரனே
சிவஞ்செய் பரதந் திரனுன்மா
தேவ யௌவ நேசநம. ௧௮

அன்பு தரிற்பே ரின்பருள்வோ
மென்னி லஃதோர் விலைப்பொருளன்
றின்ப வள்ளால் கைம்மாறென்
றெண்ணு யளப்பி லார்க்களித்தும்
பின்பு குறையா வரம்பில்லாப்
பேரின் புளனித் தியதிருத்த
னென்ப ருனையே யின்பருளா
யீச யௌவ நேசநம. ௧௯

பாச நீக்கி யாளுதனின்
பாலே யாகு மியல்பானே
பாச நீக்க முனைநிருப
பதத்தா லீச னெனுஞ்சுருதி
பாச பந்த சுரரெனையர்
பரிவு கொளினு மியலாதப்
பாச நீக்கி யருளுதியெம்
பரம யௌவ நேசநம ௨௰

பவமுன் சர்வே சானபசு
பதியுக் கிருத் திரபீம
திவிய மகானென் பெயர்முறையே
திகழ்பூ முதலோ ரெட்டுருவி

லவனி மூர்த்தி மானுலகா
தாரன் கோடி யருக்கொளிதாழ்
சவியன் பவனென் றோதுபுலீச்
சரம்வாழ் யௌவ நேசநம. ௱௧

ஆற்றன் மிகுமகோ தகிமுன்
ஞஞ்சா ருவசா கரமயனுய்த்
தோற்று சித மறையினரர்
சுரர்மா வாதி பயிர்முழுதும்
போற்று புவன மூர்த்தியனைப்
போற்று புவன மெல்லாமுந்
தேற்று சருவ புலீச்சரம்வாழ்
தேவே யௌவ நேசநம ௱௨

பலவெங் கிரண பங்திகளாற்
பவன முழுதும் விளக்கஞ்செய்
தலைவ னுள்கோ ணிரைத்தாமன்
தலைவன் கரமென் கமலகர
னிலகு மிரவி மூர்த்திமா
னெனுமீ சான னீயெனப்போற்
றுலகுக் கொருவா புலீச்சரத்தி
லொருவா யௌவ நேசநம. ௱௩

வான மனிப்போன் மகபதிக்கு
மகஞ்செய் பவருக் கனையபலன்
மான வளிப்போன் விபத்தெவர்க்கு
மாற்று பவனு ருயிரெவைக்குங்
கோனி யமான மூர்த்தியனைக்
கூறும் வாய்மைப் பசுபதியாம்
ஞான தான புலீச்சரம்வாழ்
நாத யௌவ நேசநம. ௱௪

அனில விவித வகையினுயி
ரனைத்துள் வசித்துப் போற்றியருள்
புனிதன் வன்னிக் குறுதுணையாய்ப்
பொலிய விரவி விளக்குபரன்
தனித வாயு மூர்த்திமா
னென்று சாற்று முக்கிரனு
மினிய பரம புலீச்சரம்வா
ழீச யௌவ னேசநம. ௭௫

சோம சூரி யாக்கினியென்
சோதித் திரயந் திகழ்நயனன்
காம னெரியக் கனல்விழித்தோன்
கருது புவன முழுதளிப்போன்
றாம னங்கி மூர்த்தியனுய்ச்
சுருதி புகலு முருத்திரப்பேர்
நாம பரம புலீச்சரம்வாழ்
நாத யௌவ னேசநம. ௭௬

அருக்கன் முதற்கோ ளனைத்து
மமர ரெவரு மலங்கலெனத்
தரிக்கு முதல்வன் முதலீறு
சாரான் சருவாண் டமுமொளியின்
வரச்செய் வடிவ நபமூர்த்தி
மானென் றோது பீமனென
வுரைக்கும் பரம புலீச்சரம்வா
ழொருவ யௌவ னேசநம. ௭௭

பயிர்க ளௌவையுங் கலையமுதம்
பரப்பி விருத்தி தரப்புரிவோ
னுயர்தன் னொளியா னுலகங்க
ளொருங்கு திகழ வொளிசெய்வோன்
மயர்முற் றொளிக்கும் விதுமூர்த்தி
மானு மகானென் றருணூல்க
ளியனூ லுரைக்கும் புலிச்சரம்வா
ழீச யௌவ நேசநம. ௱அ



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருப்புலீச்சரம்

# ஸ்ரீ யௌவநாம்பா பதிகம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ யௌவநாம்பா பதிகம்

## கட்டளைக் கலித்துறை

மணியின் னொளியௌவ நேசரி னீயெனும் வாய்மை நின்றும்
பிணியின் னுயிரொழிந் துய்கென் கருணையிற் பின்னையைப்போ
லெணியின் னருளுந மேயினை பூசையி லெய்தியெம்மை
யணியின் பருள்புலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே. க

தொழுவா ரவர்துய ராயின தீர்த்த லுனதொழிலென்
றெழுமாண் சுருதிசொற் றுங்குனை யேதொழு மென்னையிட
ரொழியா துடற்ற வினையா மலைவதுன் னேகருளுக்
சழகோ திருபபுலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே உ

தருவா யருளினி யின்னன்முற் றேதுந் தமைக்குமின்பென்
றுருவா நிறைஞ்சுமென் வேட்கைமுற் றும லுலைதனன்றே
வருமே லெனிற்றுய ராற்றிலன் பாற்றிநல் வாழ்வுவிரைந்
தருளாய் திருப்புலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே ௩

பன்னெடுங் காலக்க ணின்னடி போற்றிப் பரவுமென்னை
யின்னலொன் றேபல வாட்டுத லோர்ந்து மிரங்கிலையே
னுன்னல தேதர ணேவாத் துனிமுற் றொழித்தெனைப்போற்
றங்கல மீபுலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே. ௪

நாரா யணனெனுங் காரணப் பேர்சிவ நாமமென்ப
தோரா தவர்க்குநின் னாரா யணிப்பெய ரோர்விக்குமேற்
றேறோர்வி லேற்குன் றிருவடி ஞானந்தெளிப்பவர்மற்
றுயோ வருள்புலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே. ௫

எத்தெய்வம் யார்மேற் கொளினுமங் கெய்து மிறைசிவனென்
றுத்தம நூல்சொல னேரே விளக்கு முயிரெவைக்குஞ்
சத்தியம் பாவெனு நாமம் பிறரெவர் தாங்கவல்லா
ரத்தன் னமர்புலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே. ௬

இன்னல் லொருங்கொழித் தின்பருள் கென்றிறைஞ் சென்னி
தின்னருள் செய்கிலை யூழ்வலி நின்வலி யிற்பெரிதோ [டர்தீர்த்
வன்னதுன் ஞாணை வழிச்செலு மென்ப தகிர்தங்கொலோ
வன்னை யருள்புலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே. ௭

தனையரைப் போற்றனற் றாய்கட னேயத் தனையருள்ளு
நனியிட ருற்றறி வின்றுழல் வோரை நயந்தளிப்பத்
துணைவளத் தாயித் தகையிரு வேமிடைத் துன்னுமன்னே
யனைய வருள்புலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே. ௮

தேவன் றொருவ னவன்சிவ னேபிறர்த் தேவரென்ப
தோவுப சார மடையொரீஇத் தேவியென் றேதுநின்பேர்
சேவர்க ளேயவ ரென்றுண்மை தேற்றுத றேர்ந்தடைந்தே
னுவ தருள்புலி யீச்சரம் வாழ்யௌவ நாம்பிகையே. ௯

நாரணி யம்பப மனோன் மனி மீன நயனிபரி
பூரணி சங்கரி பார்ப்பதி யீசை புராந்தகிமா
காரணி சாம்பவி நீலிகங் காளி கௌரியுமை
யாரணி சீர்ப்புலி யீச்சரம் வாழ் யௌவ நாம்பிகையே. ௰

திருச்சிற்றம்பலம்.

---

பாரதி பிரஸ், மன்னார்குடி.